அ. வேயர்தங்கள் குலத்துதித்த. நிகமத்தில், இத்திருமொழியை அதிகரித்தார்க்கு பலம், தம்மைப்போலே அநந்யார்ஹ சேஷபூதராகப் பெறுவர்களென்கிறார்.

மூ.—வேயர்தங்கள் குலத்துதித்த விட்டுசித்தன் மனத்தே
கோயில்கொண்ட கோவலனைக் கொழுங்குளிர் முகில்வண்ணனை
ஆயரேற்றையமரர்கோவை யந்தணர்தமமுதத்தினைச்
சாயைபோலப் பாடவல்லார்தாமு மணுக்கர்களே. கக.

பெரியாழ்வார் திருமொழி முற்றிற்று.

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.

பதவுரை.

வேயர்தங்கள்— வைதிகருடைய
குலத்து— குலத்திலே
உதித்த— திருவவதரித்த
விட்டுசித்தன்— பெரியாழ்வாருடைய
மனத்தே— மநஸ்ஸிலே
கோயில் கொண்ட — திருக்கோயில் கொண்டெழுந்தருளியிருக்கிற
கோவலனை— கோபகுமாரனைப்
கொழு— செவ்விபெற்றதாய்
குளிர்— குளிர்ந்திருந்துள்ள
முகில்— மேகம்போன்ற
வண்ணனை— திருநிறத்தையுடையவனைப்
ஆயர்— இடையர்களுக்கு
ஏற்றை— தலைவனானவனைப்
அமரர்— நித்யஸூரிகளுக்கு
கோவை— ஸ்வாமியானவனைப்
அந்தணர்தம்— ஸநகாதி ப்ரஹ்மர்ஷிகளுக்கு
அமுதத்தினை— நிரதிசயபோக்யனாயுள்ளவனை
பாடவல்லார்தாம்— பாடவல்லவர்கள்
சாயை போல— நிழலைப் போலே
அணுக்கர்கள் — அந்தரங்கராகப் பெறுவர்கள்.

வ்யா. வேயர்தங்கள். உதயகிரியிலே ஆதித்யனுதித்தாற்போலே யாய்த்து இக்குடியிலே இவர் வந்தவதரித்தபடி. அவன் கேவலம் அந்தகாரத்தையிறே போக்குவது; "தனிச்சுடரே" என்று அவ்வாதித்யனுமிங்கேயாகையாலே அஜ்ஞாநாந்தகாரத்தைப்போக்கி, ஹ்ருதய கமலத்தை அலர்த்தும் ஆதித்யனாய்த்து இவர். விட்டுசித்தன் மனத்தே. விஷ்ணுசித்தரென்று திருநாமம். மனத்தே. ஹ்ருதயத்திலே, விஷ்ணுசித்தர் என்று நிரூபகமாய், அவனை விடாமை அநுஷ்டாந பர்யந்தமானபடி. கோயில்கொண்ட கோவலனை. திருப்பல்லாண்டு தொடங்கி இவ்வளவும் இவர் திருவுள்ளத்திலேயிருக்கிற க்ருஷ்ணன், தான்பிறந்த படியையும் வளர்ந்தபடியையும் இவரைக்கொண்டு கேட்டபடி. வால்மீகிபகவான்பாட, குசலவர்களைக்கொண்டு கேட்ட சக்ரவர்த்தி திருமகனைப்போலன்றே ஸ்ரீநந்தகோபர் திருமகன் கேட்டபடி. "வைகுந்தங் கோயில்கொண்ட குடக்கூத்தன்" என்னுமாபோலேயன்று இவர் திருவுள்ளத்திலே கோயில்கொண்டபடி;—

"திருமாலிருஞ் சோலைமலையே திருப்பாற்கடலே யென்தலையே, திருமால் வைகுந்தமே தண்திருவேங்கடமே யெனதுடலே" என்றும், "திருக்கடித்தானமு மென்னுடைச்சிந்தையும்" என்கிறபடியே உகந்தருளின நிலங்களோடொக்கவிறே ஆழ்வார் திருவுள்ளத்தை ஆதரித்தது. "நன்கென்னுடலங்கைவிடான்" "நங்கள் குன்றங்கைவிடான்;" எதுக்காக?; * நண்ணாவசுரர் நலிவெய்த நல்லவமரர் பொலிவெய்த... நலிகைக்காக. உடலங் கைவிடாதது எதுக்காக?; திருவாய்மொழி பாடுகைக்காக. அப்படியன்றிக்கே, "இடவகைகளிகழ்ந்திட்டு" என்கிறபடியே, அவற்றை உபேக்ஷித்திறே இவர் திருவுள்ளத்தை இடவகையாகக் கொண்டது. க்ருஷ்ணன்கோயில் பெரியாழ்வார் திருவுள்ளமாய்த்து. ஆகையாலிறே "மெய்ம்மைப் பெருவார்த்தை விட்டுசித்தர் கேட்டிருப்பர்" என்றது. உள்ளிருப்பார் சொல்லும் வார்த்தை உடனிருப்பார்க்குத் தெரியுமிறே.

கோவலனை. தாழ்ந்த குலத்திலே வந்தவதரித்து அவர்களுக்கு ஸுலபனானாற்போலே பார்த்து இவர்க்கு ஸுலபனானபடி. கொழுங்குளிர் முகில்வண்ணனை. "இவர் திருவுள்ளத்திலே புகுந்தபின்பாய்த்து - குளிர்ந்து செவ்வியுண்டாய்த் தன் நிறம்பெற்றது திருமேனி. முகில்வண்ணனை. இவர்க்குப் பண்ணின ஔதார்யமென்னவுமாம். இவரீடுபட்ட வடிவழகென்னவுமாம். ஆயரேற்றை. "இடையரோடே கலந்து பரிமாறப்பெற்றோம்" என்கிற திருவுள்ளத்தில்ப்ரீதியால் வந்த செருக்கோடே யிருக்குமாபோலே பார்த்து இவர் திருவுள்ளத்திலே புகுரப்பெற்ற ப்ரீதியால் வந்த செருக்கும். "செங்கனிவா யெங்களாயர் தேவே." அமரர்கோவை. அநுபவம் மாறில் முடியும்படியான நித்யஸூரிகளுக்கு ஸ்வாமியானவனை. "அயர்வறுமமரர்களதிபதி." அந்தணர்தமமுதத்தினை. * தெளிவிசும்பிலே நடக்கிற அநுபவம் இவ்விபூதியிலே நடக்கும்படியிருக்கிற ஸநகாதிகளுக்கு நிரதிசயபோக்யனாயிருக்கிறவனை. "பாற்கடல் பாம்பணைமேல் பள்ளிகொண்டருளுஞ் சீதனையே தொழுவார் விண்ணுளாரிலுஞ் சீரியர்" என்னக்கடவதிறே. "வேதியர் முழுவேதத்தமுதத்தை."

சாயைபோலப்பாடவல்லார் தாமுமணுக்கர்களே. எம்பாரைச்சிலர், "இப்பதத்துக்குப் பொருளென்?" என்றுகேட்க; "நான் உடையவர் ஸ்ரீபாதத்திலே இது கேட்டிலேன்; ஆகிலும், நீங்கள்கேட்ட வர்த்தம்போராதென்ன வொண்ணாது, இப்போதே கேட்டு உங்களுக்குச் சொல்லவொண்ணுதபடி உடையவரும் திருக்கோட்டியூர்நம்பி ஸ்ரீபாதத்தேற வெழுந்தருளினார்; ஆகிலும் உங்களுக்கு இப்போதே சொன்னேனாகவேணும்" என்று உடையவர் திருவடிநிலைகளை யெடுத்துத் தம் திருமுடியிலே வைத்துக்கொண்டு, "இப்போது உடையவர் எனக்கருளிச்செய்தார், கேட்கலாகாதோ" என்று, "பாடவல்லார் - சாயைபோல - தாமுமணுக்கர்களே" என்றருளிச்செய்தார்.

"தாமும்" என்கைக்கடி - அவர்களேற்றத்தை நினைத்து. அதாவது ப்ரயோஜநாந்தரங்களையும், உபாயாந்தரங்களையும் கணிசித்து மங்களாசாஸநம் பண்ணுகையன்றிக்கே, தத்காலத்துக்கு மங்களாசாஸநம் பண்ணுகையுமன்றிக்கே, கழிந்தகாலத்துக்கும் மங்களாசாஸநம் பண்ணுகையிறே ஏற்றம். இப்படிக்கொத்த தன்மை தம்முடைய வம்சத்தில் ஏழுபடிகாலில்லை யென்னுமிடத்தை "ஏழாட்காலும் பழிப்பிலோம்" என்றருளிச்செய்தாரிறே. பாடுகையாவது "உன் செவ்வடிசெவ்வி திருக்காப்பு" என்கை. சாயைபோலவென்றது - புருஷனுடைய சாயை அவன்புக்கவிடத்தே புக்குப் புறப்பட்டவிடத்தே புறப்பட்டு ப்ரவர்த்தி நிவர்த்தி அவனிட்ட வழக்காமாப்போலே, இத்திருமொழி கற்றார்க்கும் தங்களுக்கென்ன ஒரு ப்ரவர்த்தி நிவர்த்திகளின்றிக்கே ஈச்வரனுக்கு அந்தரங்கராகப் பெறுவர்கள். "செவ்வடி செவ்வி திருக்காப்பு" என்று பாடவல்லார், * நிழலுமடிதாறுமாகப் பெறுவர்கள். அடிதாறு - திருவடிகளில் ரேகைகள். சாயைபோலப் பாடவல்லார் - நிழலுண்டாகப் பாடவல்லார். நிழலாவது - குளிர்த்தி. "குளிரப்பாடவல்லார்" என்றுஞ் சொல்லுவர்கள். ... ... ... ... ... ... கக.

---

## பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

அடிவரவு.—சென்னி பறவை எம்மனா கடல் பொன்னுன் பருப்பனந்தன் பனி தடவரை வேயர் மார்கழி.

ஆக திருமொழி - சஉ - க்கு, பாட்டு - சஎக.

பெரியாழ்வார் திருமொழி வ்யாக்யாநம் முற்றிற்று.

# தமிழ் இலக்கம் — அட்டவணை

| | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| தமிழ் | க | உ | ௩ | ச | ரு | சு | எ | அ | கூ | க0 |
| ஆங்கிலம் | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 |
| தமிழ் | கக | கஉ | க௩ | கச | கரு | கசு | கஎ | கஅ | ககூ | உ0 |
| ஆங்கிலம் | 11 | 12 | 13 | 14 | 15 | 16 | 17 | 18 | 19 | 20 |
| தமிழ் | | | ௩0 | ச0 | ரு0 | சு0 | எ0 | அ0 | கூ0 | க00 |
| ஆங்கிலம் | | | 30 | 40 | 50 | 60 | 70 | 80 | 90 | 100 |
| தமிழ் | | உ00 | ௩00 | ச00 | ரு00 | சு00 | எ00 | அ00 | கூ00 | க000 |
| ஆங்கிலம் | | 200 | 300 | 400 | 500 | 600 | 700 | 800 | 900 | 1000 |

